# வராகர் ஓரா சாத்திரம்



தஞ்சாவூர் மகாராஜா சரபோஜியின்

சரஸ்வதி மஹால் நூலகம்
மற்றும் ஆய்வு மையம்

தஞ்சாவூர்

தஞ்சை சரசுவதி மகால் வெளியீட்டு எண்: 131

இலிங்கன் இயற்றிய

# வராகர் ஓரா சாத்திரம்

(பழைய உரையுடன்)

பதிப்பாசிரியர்
வித்துவான் திரு. **அடிகளாசிரியர்,**
தமிழ்ப்பேராசிரியர்,
திருவருள் நிலையம், சித்தநாதேச்சுராதீனம், குகையூர்.




தஞ்சாவூர் மகாராஜா சரபோஜியின்
**சரசுவதி மகால் நூலகம்** மற்றும்
**ஆய்வுமையம்**
தஞ்சாவூர்

2009 விலை ரூ.180-00

# நூற்பதிப்பு விளக்கக் குறிப்பு

| | | |
|---|---|---|
| நூற்பெயர் | : | வராகர் ஓரா சாத்திரம் |
| பதிப்பாசிரியர் | : | அடிகளாசிரியர் |
| வெளியிடுபவர் | : | இயக்குநர்,<br>சரசுவதி மகால் நூலகம்,<br>தஞ்சாவூர். |
| வெளியீட்டு எண். | : | 131 |
| மொழி | : | தமிழ் |
| பதிப்பு | : | *ஆறாம் பதிப்பு* |
| வெளியீட்டு நாள் | : | ***2009*** |
| தாள் | : | TNPL 18.6 கி.கி. |
| நூல் அளவு | : | 21x 14 செ. மீ. |
| பக்கங்கள் | : | 544 |
| படிகள் | : | 500 |
| எழுத்து | : | 12 புள்ளி |
| அச்சிட்டோர் | : | ஒளி அச்சு,<br>சரசுவதி மகால் நூலகம் |
| புத்தகக்கட்டு | : | ராப்பர் கட்டு |
| பொருள் | : | சோதிடம் |
| விலை | : | ரூ. **180 – 00** |

# வெளியீட்டாளர் முகவுரை

தஞ்சையில் அமைந்து தரணி முழுமைக்கும் அறிவுச் செல்வமாகப் பயன்பட்டுக்கொண்டிருக்கும் அரும்பெரும் நிறுவனம் சரசுவதி மகால் நூலகமாகும். சுவடிக் கருவூல மாகவும், பன்மொழி நூற்களஞ்சியமாகவும், பன்மொழி ஆய்வு மையமாகவும் திகழும் சரசுவதி மகால் நூலகம் ஆற்றிவரும் தொண்டு அளப்பரியது. இந்நூலகம் தமிழகத்தினர் மட்டுமின்றிப் பிற மாநிலத்தவரும், பிற நாட்டினரும் பயன்படுத்தி வருகின்ற ஓர் அரிய ஞான ஆலயமாகும். இந்நூலக வெளியீடான வராகர் ஓரா சாத்திரம் எனும் இந்நூல் தற்போது ஆறாம் பதிப்பாக வெளிவருகிறது. இந்நூலக சுவடி எண்கள் 793 மற்றும் 804 ஆகிய இரு சுவடிகளின் அடிப்படையில் அமைந்தது இந்நூல்.

இந்நூலின் மூல ஆசிரியர் வடபுலத்தில் தோன்றிய வராக மிகிரர் எனும் சோதிட வல்லான் ஆவார். வராக மிகிரர் ஆரியப்பட்டருக்குப் பிறகு ஒருதலைமுறை தாண்டி பிறந்தவர் என்பர். இவரிடம் இந்துக்களும் பிற நாட்டு அறிஞர்களும் பெரிதும் மதிப்புக்காட்டினர். இவர் வான நூல்களின் ஏற்றத்தாழ்வை எழுதிய வித்தகர்; வானவியலில் மிக்க தேர்ச்சியடைந்தவர்; கிரக சாரங்கள், கிரகணங்கள், சூரியன் உச்சிக்கு வரும் சமயம் முதலியவற்றைத் தீர்க்கமாகக் கணித்தவர். இவர் கி. பி. 505ல் பிறந்து 587ல் காலமானார் என ஆய்வாளர்கள் கூறுவர்.

பிருகத் சாதகம் எனும் இந்நூல் சோதிடவியல் நூலாகும். பிருகத் சாதகத்திற்கு வராகர் ஓரா சாத்திரம் என்றொரு பெயரும் வழங்குகிறது. இந்நூல் ஒருவனுடைய பிறப்புக் காலத்தைக் கணித்து, அப்பொழுதுள்ள கோள்களின் நிலையினை அறிந்து அவனுக்கு வாழ்நாளில் உண்டாகும் இன்பம், துன்பமான பலன்களைக் கூறிச்செல்கின்றது. வராகர் ஓரா சாத்திரம் வடமொழியின் பிருகத் சாதகத்தின் மொழி பெயர்ப்பு

நூலாகும். யாப்பு வகையால் தமிழில் அழகான பாடல்களால் இலிங்கன் என்னும் புலவர் பெருமகனார் தமிழ் மக்களுக்குப் படைத்துக் கொடுத்துள்ளார். வடமொழி வராகவோரா என்னும் பிருகத் சாதகத்தை இவ்விலிங்கனேயன்றி, திருமலை நகரத்தில் விசுவ குலத்தில் தோன்றிய வயித்தியலிங்க சோதிடர் என்பாரும், தமிழிலே மங்களேஸ்வரீயம் என்னும் பெயரால் மொழிபெயர்த்துப் பாடியுள்ளார். இலிங்கனும், வயித்தியலிங்கமும் பிருகத் சாதகத்தைத் தமிழில் மொழி பெயர்த்துப் பாடியிருந்தாலும் நூல் அமைப்பில் வேறு பாடுகள் உள்ளன.

*1970*ஆம் ஆண்டு முதற்பதிப்பாக வெளியிடப்பட்ட இந்நூல் தற்பொழுது ஆறாம் பதிப்பைப் பெற்றுள்ளது இந்நூலுக்கு வரவேற்பைக் காட்டுகின்றது.

இந்நூல் பெரும்புலவரான பேராசிரியர் அடிகளாசிரியர் அவர்களால் சிறப்புறப் பதிப்பிக்கப்பட்டுள்ளது. இவர் இப்பொருண்மையில் சிறப்பாக வெளிவந்துள்ள பல நூல்களை எடுத்தாண்டு இந்நூலோடு ஒப்பீடு செய்து பதிப்புத்துள்ளமை பாராட்டுக்குரியது.

இந்நூல் வெளிவர நிதி உதவி நல்கிய நடுவண் அரசுக்கும், நிருவாக அலுவலர் மற்றும் வெளியீட்டு மேலாளர் பொறுப்பு வகிக்கும் திரு. சாமி. சிவஞானம் அவர்களுக்கும், இந்நூல் கணினி அச்சில் வெளிவர பணியாற்றிய கணினிப் பணியாளர் அனைவருக்கும் எனது இனிய பாராட்டுதல்களைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

**எம். எஸ். சண்முகம்,** இ. ஆ. ப.,
**மாவட்ட ஆட்சித்தலைவர் மற்றும்**
**இயக்குநர்,**
**சரசுவதி மகால் நூலகம்.**

தஞ்சாவூர்.
*21-4-2009.*

## வராகர் ஓரா சாத்திரப் பொருளடக்கம்

உ

இறைவன் துணை

# பதிப்பாசிரியர் முன்னுரை

## தொடக்கம்

பலவகைப் பொருள்களின் உண்மை இயல்புகளை உள்ளது உள்ளவாறு நாம் உணர்ந்து கொள்வதற்கும் உணர்ந்து கொண்டனவற்றைப் பிறர்க்கு எடுத்துக் கூறுவதற்கும் நமக்கு அறிவு பயன்படுகின்றது. அறிவுடைமையின் சிறப்பினை,

"அறிவுடையார் எல்லாம் உடையார் அறிவிலார்
என்னுடைய ரேனும் இலர்"

என்னும் திருக்குறட் பாவால் உணர்ந்து கொள்ளலாம். உயிரினங்களெல்லாம் அறிவினைப் பெற்றிருப்பினும் அவற்றுள் மக்களுயிரே அறிவுடைமையிற் சிறந்து விளங்குகிறது. அத்தகைய மக்களுள்ளும் சிலரை அறிவன், அறிஞன் என்ற பெயரால் உலகம் அழைக்கின்றது.

எதிர்காலத்தில் விளையும் நன்மை தீமைகளாய விளைவுகளை அவ்வப்பொழுது நிகழும் பலவகை நிமித்தங்களாலே உய்த்துணர்ந்து அவற்றை உணர்த்தி வருவோர்க்குக் கணி என்றும், கணிவன் என்றும், அறிவன் என்றும் பெயர்களிருத்தலைத் தமிழிலக்கண நூல்களால் நாம் உணர்ந்து கொள்ளுகிறோம். கண்ணுதல் என்றால் உய்த்துணர்தல் கருதி உணர்தல் என்று பொருளாகும். கண்ணி உரைத்தலால் அவ்வாறு உரைப்பவனுக்குக் கணி என்று பெயருண்டாயிற்று. "கண்ணி யுரைப்பான் கணி" என்பது புறப்பொருள் வெண்பாமாலை யாகும்.

இறப்பு நிகழ்வு எதிர்வு என்று காலம் மூன்று என்று கூறுவர். அவ்வாறின்றி மழைக்காலம் பனிக்காலம் வெயிற்காலம் என்று காலம் மூன்று என்றும் கூறுவர். கணிவன் என்பான் மழைக் காலம்

முதலான மூன்று காலங்களிலும் பகலும் இரவும் இடைவிடாமல் வானத்தைப் பார்த்து ஆண்டு நிகழும் வில்லும் மின்னும் ஊர்களும் தூமமும் மின்வீழ்வும் கோள் நிலையும் மழை நிலையும் பிறவும் பார்த்து அவற்றால் உலகிற்கு விளையும் பயன்களை எடுத்துக் கூறவல்லவனாவான். இக் கருத்தினை

"மறுவில் செய்தி மூவகைக் காலமும்
நெறியின் ஆற்றிய அறிவன் தேயமும் "

என்னும் தொல்காப்பிய (பொருள் - 74) நூற்பாவிற்கு
இளம்பூரண அடிகள் எழுதிய உரையால் உணர்ந்து
கொள்ளலாம்.

இத்தகைய அறிஞர் ஒவ்வொரு நாட்டிலும் வாழ்ந்து வந்துள்ளனர். இவர்களுள் மிகச் சிறந்தவர் வராகமிகிரர் என்பவராவார். இவர் அவந்திகா நாட்டில் கபித்த கிராமத்தைச் சேர்ந்த ஆதித்திய தாசர் என்பவனாரின் மகனாவார். தந்தையாகிய ஆதித்திய தாசர் என்பார் வடமொழிப் பயிற்சியிலும் சோதிட நூல் உணர்ச்சியிலும் மிக வல்லுநராயிருந்தார். வராகமிகிரர் தன் தந்தையிடத்தே அவற்றைப் பயின்று அருங்கலை விநோதராய் விளங்கினார்.

## வராகமிகிரர் செய்த நூல்

வராகமிகிரர் ஆரியபட்டருக்குப் பின் ஒரு தலைமுறை தாண்டிப் பிறந்தவர் என்று அறிஞர் கருதுகின்றனர். வராகமிகிரர் தம் காலத்திற்கு முன் பாரத நாட்டுள் வழங்கி வந்த சோதிடக் கலைகளுடன் கிரேக்க நாட்டுச் சோதிடக் கலைக்கும் மதிப்புக் கொடுத்துச் சேர்த்து ஆராய்ந்தார். தமக்கு முன்னிருந்த பலவகைச் சோதிடச் சித்தாந்தங்களை எல்லாம் ஐந்தாகத் தொகுத்துப் பஞ்ச சித்தாந்திகா என்னும் பெயரால் நூல் இயற்றினார். இது பௌலிச சித்தாந்தம் உரோமக சித்தாந்தம் சாவித்திர அல்லது சூரிய சித்தாந்தம் வாசிட்ட சித்தாந்தம் பிரம (பிதாமக) சித்தாந்தம் என்று ஐந்து பிரிவாக உள்ளது. இவற்றுள் பிரமசித்தாந்தம் மிகப் பழமையான கொள்கையினை உடையது. பௌலிச உரோமக

சூரிய சித்தாந்தங்கள் முறையே ஒன்றில் ஒன்று சிறந்தவையாகும். சோதிடக் கலையின் பதினெண் சித்தாந்தங்களைச் சாதகாலங்காரம்

"ஆதவன்புங் கவன்வேத வியாசபரா சரனும்
அத்திரிரோ மசன்வசிட்டன் அணிமரிசி தானும்
போதபௌ லகன்யவனன் சௌனன்மனு பிருகு
புகழ்சனகன் ஆங்கீரன் காசிபன்கர்க் கியனும்
ஓதியநா ரதன்முதலீ ரொன்பதின்மர் கூடி
உரைசெய்த நான்கிலக்கத் தைம்பதினா யிரமாம்
நீதிபெறுஞ் சோதிடம்."

என்று கூறுதலைக் காண்க. இப்பாட்டுள் ஆதவன் என்று சூரிய சித்தாந்தத்தை, புங்கவன் என்றது பிரம சித்தாந்தத்தை, ரோமசன் என்றது உரோமக சித்தாந்தத்தை, பௌலகன் என்றது பௌலிச சித்தாந்தத்தை, வசிட்டன் என்றது வாசிட்ட சித்தாந்தத்தினை யாகும். இவையேயன்றி யவனன் என்றது கிரேக்க சித்தாந்தமாகும். சௌனன் என்றது சீன சித்தாந்தமாகும்.

வராகமிகிரர் பஞ்ச சித்தாந்திகா என்னும் நூலைனையன்றி பிருகத்சாதகம் பிருகத் சம்கிதை பிருகத் விவாக படலம் பிருகத் யாத்திரை முதலான நூல்களையும் இயற்றியுள்ளனர். அவர் இயற்றிய நூல்களுள்பஞ்ச சித்தாந்திகாவும் பிருகத் சாதகமும் மிகச் சிறந்தவையாகும்.

## வடமொழி வராகர் ஓரா சாத்திரம்

பிருகத் சாதகத்திற்கு வராகர் ஓரா சாத்திரம் என்றொரு பெயரும் வழங்குகிறது. இந்நூல் ஒருவனுடைய பிறப்புக் காலத்தைக் கணித்து அப்பொழுதுள்ள கோள்களின் நிலையினை அறிந்து அவனுக்கு வாழ்நாளில் உண்டாகும் இன்பம் துன்பமான பலன்களைக் கூறிச் செல்கின்றது. சாராவளியின் முதல் அத்தியாயத்து இரண்டாம் சுலோகம் "வசிட்டர் பராசரர் முதலான இருடிகள் மிகவும் விரித்து விளக்கிய பழைய கிரந்தங்களாகிய ஓரா சாத்திரங்களைச் சுருக்கி வராக மிகிராசாரியார் பிருகத் சாதகம் என்னும் பெரும்பயன் தரும் ஓரா சாத்திரத்தை இயற்றியருளினார்" என்று கூறுவதால் பிருகத் சாதகம் விரிந்ததைத் தொகுத்துக் கூறும் தொகை நூலாகும். இது நானூற்றொன்பது விருத்தங்களால்

செய்யப்பெற்றுள்ளது. பலவகைச் சந்த அமைப்புக்களையுடைய அழகான விருத்தங்களை இந்நூலிற் காணலாகும்.

**வராகமிகிரர் காலம்**

வரலாற்றாசிரியரில் ஒரு சிலர் வராகமிகிரரை மௌரிய சந்திரகுப்தர் காலத்தவரென்று, கொண்டு கி-மு 56க்கு முன் வாழ்ந்திருந்தார் என்பர். ஒரு சிலர் விக்கிரமாதித்த சந்திர சமுத்திர குப்தர் காலத்தவரென்று கொண்டு கி-பி ஆறாம் நூற்றாண்டில் வாழ்ந்திருந்தாரென்று கூறுவர். ஆனால் வராகமிகிரர் கி-பி 505இல் தோன்றி கி-பி 587இல் மறைந்தார் என்னுங்கொள்கையே வலிவுடைத்தாக அறிஞரால் ஏற்றுக்கொள்ளப்படுகின்றது.

தமிழ் வராகர் ஓரா சாத்திரமும் அதை இயற்றினாரும்

மேற்கூறிய வடமொழி பிருகத்சாதகம் என்னும் வராகர் ஓராசாத்திரத்தினை மொழிபெயர்ப்பு என்னும் யாப்புவகையால் தமிழில் அழகான பாடல்களால் இலிங்கன் என்னும் புலவர் பெருமகன் தமிழ் மக்களுக்குப் படைத்துக் கொடுத்துள்ளார்.

"ஓரையாங் கடல்க டக்க
உத்தியின் வல்லோர் சொன்ன
வேர்தரு சாத்தி ரத்தை
விருத்தவித் தார மாக
ஆரிய வராகர் கூற
அம்மணி அழுத்த லேபோல்
பாரில்நல் லவன்இ லிங்கன்
தமிழினாற் பகரல் உற்றேன்." (2)

"மாவியல் மறைவல் லோர்முன்
வகுத்திடும் வடநூல் தன்னைத்
தேவர்க்குங் காலம் ஓர்வான்
செப்பினன் வராகன் என்போன்
நாவலன் வணிகர் தம்மில்
நல்லவன் அருள்இ லிங்கன்
தாவிய புவியின் மீதே
தமிழினிற் சாற்றி னானே." (409)

என்னும் வராகர் ஓராசாத்திரப் பாடல்களால் இலிங்கன் என்னும் புலவர் பெருமகனார் வணிகர் குலத்திலே நல்லவன் என்பார்க்குப் புதல்வனாய்த் தோன்றி நாவலராய் விளங்கியிருந்தார் என்னும் செய்தி புலப்படுகின்றது. இலிங்கன் என்னும் பெயராலும் "பரனடி யார்தம் மதியிலார் நயன மென்ன நயனம திழப்பர் மண்மேல்"(317) என்னும் பாடற்பகுதியாலும், இவர் சைவசமயத்தினர் என்னுஞ் செய்தியும் தெரிகின்றது. இவற்றைத் தவிர்த்து இவர் எந்த நாட்டிலே எந்த ஊரிலே எந்தக் காலத்திலே வாழ்ந்திருந்தார் என்ற செய்தி இப்பொழுது அறிய முடியவில்லை.

## வராகர் ஓரையை மொழிபெயர்த்தோர் இருவர்

வடமொழி வராகவோரை என்னும் பிருகத்சாதகத்தை இவ்விலிங்கனே யன்றி, திருமலை நகரத்தில் விசுவ குலத்தில் தோன்றிய வயித்தியலிங்க சோதிடர் என்பாரும் தமிழிலே மங்களேஸ்வரீயம் என்னும் பெயரால் மொழி பெயர்த்துப் பாடியுள்ளார். இலிங்கனும் வயித்தியலிங்கனும் பிருகத் சாதகத்தை தமிழில் மொழி பெயர்த்துப் பாடியிருந்தாலும் நூல் அமைப்பில் வேறுபாடுகள் உள்ளன. இலிங்கன் என்பார் பிருகத் சாதக சுலோகங்கள் ஒன்றையும் விடாமல்அந்நூலில் ஒரு சுலோகத்தால் பாடப்பட்ட செய்தியை ஒரு பாட்டினாலேயே பாடியுள்ளார். ஆனால் வயித்தியலிங்கன் என்பார் பிருகத்சாதக சுலோகங்களிற் சிலவற்றை விட்டும் ஒரு சுலோகத்தால் பாடப்பட்டிருக்குஞ் செய்தியைப் பல பாட்டால் விளக்கமாகப் பாடியும் சில விடத்தில் ஒரு பாட்டால் பாடியும் நூலமைப்பில் வேறுபட்டுச் செல்கின்றார். எவ்வாறாயினும் தமிழிலுள்ள இவ்விரண்டு நூல்களும் வடமொழி பிருகத்சாதகத்தை ஆராய்ந்து கற்க விரும்புவார்க்குப் பெரிதும் பயன்தரும் நூல்களாக இருக்கும் என்றுகருதுகிறேன்.

## இலிங்கன் இயற்றிய வராகர் ஓரா சாத்திரம்

தமிழ் வராகர் ஓராசாத்திரம் இராசிபேத அத்தியாயம் முதலாகத் திரேக்காண அத்தியாயம் ஈறாக இருபத்தைந்து அத்தியாயங்களைப் பெற்றிருக்கிறது. தஞ்சாவூர் அரண்மனைச் சரபோசி மன்னர் சரஸ்வதி மகால் நூல் நிலையத்தில் 793, 804

என்னும் எண்கள் உள்ள வராகர் ஓரா சாத்திர ஓலைச் சுவடிகள் இரண்டு உள்ளன. இவ்விரண்டு சுவடிகளும் குறைச்சுவடிகளாகவே உள்ளன. 793 என்னும் எண்ணுள்ள சுவடியில் எட்டு, பதினேழு, பதினெட்டு, பத்தொன்பது என்னும் எண்ணுள்ள நான்கு அத்தியாயங்கள் இல்லை. 804 என்னும் எண்ணுள்ள சுவடியில் முன் சுவடியில் இல்லாத எட்டாவது அத்தியாயம் மட்டும் உள்ளது பதினேழு, பதினெட்டு, பத்தொன்பது அத்தியாயங்கள் கிடைக்கவில்லை. வராகர் ஓரையைக் கற்பவர்க்கு எல்லா அத்தியாயங்களும் இருக்க வேண்டும் என்னும் கருத்தால் வடமொழி பிருகத் சாதகத்திலிருந்து அவற்றை எடுத்து இப்பதிப்பில் சேர்த்துள்ளேன்.

ஓலைச்சுவடியில் இராசிபேத அத்தியாயம் 21, கிரக பேத அத்தியாயம் 22, வியோனி சென்ம அத்தியாயம் 9, நிஷேக அத்தியாயம் 23, சென்ம அத்தியாயம் 27, சத்தியோக மரண அத்தியாயம் 14, ஆயுர்த்தாய அத்தியாயம் 14, திசாபல அத்தியாயம் 23, அட்டவர்க்க அத்தியாயம் 8, கர்மசீவத் திரவியாகம சித்தி அத்தியாயம் 4, இராசயோக அத்தியாயம் 20, நாபச யோக அத்தியாயம் 19, சந்திர யோக அத்தியாயம் 9, துவர்க் கிரக அத்தியாயம் 5, பிரவிரச்யா யோக அத்தியாயம் 4, இராசி சீல அத்தியாயம் 47, (திருட்டி பல அத்தியாயம் 15 பாவபல அத்தியாயம் ஆஸ்ரய யோக அத்தியாயம் இல்லை) பிரகீரண விதான நாம அத்தியாயம் 6, அரிட்டயோக அத்தியாயம் 17, (ஸ்திரீ சாதக அத்தியாயம் 16, துன்மரண யோக அத்தியாயம் 15, நட்ட சாதக அத்தியாயம் 17, திரேக்காண சொரூப அத்தியாயம் 41, என்னும் எண்ணுள்ள பாட்டுகளை உடையன. நூலின் ஈற்றில் 411 என்று இந்நூலின் மொத்தப் பாட்டெண் குறிக்கப்பட்டுள்ளது. "ஓரையாங்கடல் கடக்க" என்னும் தற்சிறப்புப் பாயிரப் பாட்டு, எண் குறிக்கப் பெறாமல் சுவடி முகப்பில் எழுதப்பட்டுள்ளது. ஆசிரய யோக அத்தியாயத்தின் ஈற்றிலே தொகுத்துக் கூறும் பாட்டொன்று இருக்க வேண்டும் என்று கருதினேன். இவை இரண்டையும் சேர்க்க எனக்குப் பாட்டின் தொடர் எண் 413 ஆயிற்று.

## தமிழ் வராகர் ஓரையின் உரையாசிரியர்

தமிழ் வராக வோரைக்கு எளிய நடையில் அழகான உரையொன்று எழுதப்பட்டுள்ளது. உரையாசிரியர் பெயர் இப்பொழுது புலப்படவில்லை. இவர் உரையைப் படித்துப் பார்த்தால்இவர் வடமொழிப் புலமையில் வல்லுநர் என்பதும் பிருகத்சாதக உரையான பட்டோத்பலர் வியாக்கியானத்தினை நன்கு படித்துணர்ந்தவர் என்பதும் புலனாகின்றன.

சோதிட நூல்களைப் படித்துப் பார்த்து வேண்டிய விளக்கமான குறிப்புக்களை ஆங்காங்கே சேர்த்துள்ளேன்.

சோதிட நூல்களை நன்கு ஆராய்ந்து வெளியிட வேண்டும் என்றும், பல சோதிட நூல்களைத் தமிழில் இயற்ற வேண்டும் என்றும் எனக்கு வெகுகாலமாக எண்ணம் உண்டு. அவ்வெண்ணம் சரஸ்வதி மகால் நூல் நிலைய வாயிலாக நிறைவேறத் தொடங்கியுள்ளது. பேரறிஞரும் அருங்கலை வினோதகரும் சரஸ்வதி மகால் நூல் நிலையக் கௌரவக் காரியதரிசியும் ஆகிய பள்ளியகரம் உயர்திரு. நீ. கந்தசாமிப் பிள்ளை அவர்களும், மேற்படி நூலகத் தலைவரும் அருங்குணச் செம்மலும் ஆகிய உயர்திரு வே. கோபால ஐயங்கார், M. A., அவர்களும் இவ் வராகர் ஓராசாத்திரத்தினை நன்கு ஆராய்ந்து பதிப்பித்துத் தருமாறு எனக்குக் கட்டளையிட்டனர். அவர்கள் கட்டளையை மேற்கொண்டு என் அறிவிற்கு எட்டியவரையில் நன்கு ஆராய்ந்து இந்நூலினை வெளியிடுகின்றேன். அறிஞர் உலகம் இப் புதிய பதிப்பினை ஏற்று ஆராய்ந்து குற்றங்களையும் குணங்களையும் எனக்கு அறிவித்தால் மிக்க நன்றியுடன் . ஏற்றுக்கொள்வேன். என்னை இப்பணியில் ஈடுபடுத்திய சரபோசி மன்னர் சரசுவதி மகால் நூல் நிலையச் செயற் குழுவினருக்கும் கௌரவக் காரியதரிசி அவர்களுக்கும் நூலகத் தலைவர் அவர்கட்கும் என் உளங்கனிந்த நன்றியைத் அறிவித்துக் கொள்ளுகிறேன்.

திருவருள் நிலையம்
சித்தநாதேச்சுராதீனம்
குகையூர்
17-7-1970

இங்ஙனம்,
**திரு அடிகளாசிரியன்**
தமிழ்ப் பேராசிரியன்

## சுருக்கெழுத்து விளக்கம்

அத் - அத்தியாயம்

அத்தி - அத்தியாயம்

எ-து - என்பது

எ-று - என்றவாறு

கட - கடலங்குடி

சு - சுலோகம்

சுலோ - சுலோகம்

தொல் - தொல்காப்பியம்

ந - நடேச சாஸ்திரிகள்

நடே - நடேச சாஸ்திரிகள்

பிங் - பிங்கல நிகண்டு

பிருகத் - பிருகத் சாதகம்

மங்களே - மங்களேஸ்வரீயம்

வட - வடமொழி

வரா, வராக - வராகர் ஓரா சாத்திரம்

# வராகர் ஓரைப்பதிப்பில் எடுத்தாண்ட நூல்கள்

(பக்க எண்)

# வராகர் ஓரா சாத்திரத்துக் கூறப்பட்டுள்ள பொருட் சுருக்கம்

தமிழ் வராகர் ஓரா சாத்திரத்துள் முதலில் உள்ளது. இராசி பேத அத்தியாயமாகும். இதனுள் முதலில் காப்பாக ஞாயிறு வணக்கம் கூறப்பட்டுள்ளது. நூலின் புறத்தே தற்சிறப்புப் பாயிரமாக ஏட்டில் எழுதப்பட்டிருந்த ஓரையாங் கடல் கடக்க என்னும் பாட்டினை இவ்வத்தியாயத்துள் இரண்டாம் பாட்டாகச் சேர்த்துக்கொண்டேன். அடுத்துள்ள இரண்டு பாடல்களும் முறையே அவையடக்கத்தையும் நூல் முதலிய பொருளையும் கூறுகின்றன. இவ்வத்தியாயத்துள் ஐந்தாம் பாட்டிலிருந்தே இராசி பேதம் கூறப்படுகிறது.

பன்னிரண்டு பகுப்பாக வழங்கப்படும் வான மண்டலத்துள் மேடம் முதல் மீனம் ஈறான பன்னிரண்டு இராசிகளையும் தலை முதல் கால்கள் ஈறான பன்னிரண்டு உறுப்பாகக் கொள்ள வேண்டும் என்பதும், அசுவதி முதல் இருபத்தேழு நாள்களுக்கும் ஒரு நாளிற்கு நான்கு கால்களாகக் கொண்டு அங்ஙனம் கொண்ட நூற்றெட்டுக் கால்களையும் இராசியொன்றுக்கு ஒன்பது கால் வீதம் கொள்ளவேண்டும் என்பதும், இராசிகளின் பொதுப் பெயர் இன்னவை என்பதும், இராசிகளின் வடிவம் இத்தகையதென்பதும், மேடாதி இராசிகட்கு அதிபதிகளாகும் கோள்கள் இன்னவர் என்பதும், நவாங்கிசம் துவாதசாங்கிசம் திரிம்சாங்கிசம் கொள்ளும் முறை இத்தகைய தென்பதும், கடக விருச்சிக மீனத்தின் கடைசி நவாம்சம் இராசிச் சந்தி என்பதும், மேடம் முதலான இராசிகளின் பெயர்கள் இன்னவை என்பதும், இலக்கினம் ஓரை திரேக்காணம் நவாங்கிசம் துவாதசாங்கிசம் திரிம்சாங்கிசம் என்னும் இவை சட்டுவர்க்கம் எனப்படுமென்பதும், பகலில் வலிவுள்ள இராசியும் இரவில் வலிவுள்ள இராசியும் இன்னவை என்பதும் சிரோதய இராசி

உபயோதய இராசி பிருட்டோதய இராசி இன்னவை என்பதும் ஓச உக்கும இராசி குரூர சவுமிய இராசி ஆண், பெண் இராசி சர திர உபய இராசி இன்னவை என்பதும், கிழக்கு முதலான திசைக்குரிய இராசி இவை என்பதும், ஓரை ஓரைக்கு அதிபர் திரேக்காணம் திரேக்காணாதிபர் இன்னார் என்பதும், பிறர் வேண்டுமாற்றால் ஓரையதிபரும் திரேக்காணாதிபரும் இன்னார் என்பதும், கதிர் முதலான கோள்களுக்கு உச்ச நீச இராசிகள் இவை என்பதும், வர்க்கோத்தம நவாங்கிசமும் மூலத்திரிகோண இராசியும் இன்னவை என்பதும், இலக்கினம் முதலாகப் பன்னிரண்டு பாவங்களின் பெயர்கள் இன்னவை என்பதும், உபசயத்தானம் இவை என்பதும் கேந்திரங்களும் கேந்திர வலிவும் இன்னவை என்பதும், பன்னிரெண்டு பாவங்களும் கேந்திரம் பணபரம் ஆபோக்கிலீபம் என்று மூன்றாக வழங்கப்படும் என்பதும் கேந்திர திரிகோணங்களின் பெயர் இன்னவை என்பதும், இலக்கினாதிபனுக்கு வலிவும் வலிவின்மையும் கேந்திரம் முதலானவற்றின் வலிவும் வலிவின்மையும் இன்னவை என்பதும், மேடாதி இராசிக்கு இராசிமானம் இன்னவை என்பதும், ஒன்பதாமிடம் மூன்றாமிடத்திற்குள்ள வேறு பெயர் இவை என்பதும், இராசிகளின் நிறம் இன்னவை என்பதும், வேசித்தானம் இன்னவை என்பதும் ஆகிய இவை இவ்வத்தியாயத்தே கூறப்பட்டுள்ளன.

இரண்டாவது கிரகபேத அத்தியாயத்துள் காலம் என்னும் தேவனது ஆன்மா முதலிய கோள்கள் இவை என்பதும், கோள்களுக்குரிய தொழிலும் பெயரும் நிறமும் தெய்வங்களும் திசைகளும் இன்னவை என்பதும், தீக்கோள்களும் ஆண் பெண் அலிக்கோள்களும் ஐம்பூதக் கோள்களும் காரகக் கோள்களும் இன்னார் என்பதும், கோள்களின் குலமும் குணமும் வடிவு முதலிய இயல்பும் இன்னவை என்பதும் ஏழு தாதுக்கோள் இன்னவை என்பதும், கோள்களின் இருப்பிடமும் உடையும் உலோகமும் பெரும் பொழுதும் இன்னவை என்பதும், கோள்களின் பார்வையும்

காலமும் சுவையும் நட்பும் பகையும் சமமும் இன்னவை என்பதும், கோள்களுக்குரிய தானபலம் திக்குப்பலம் சேஷ்டாபலம் காலபலம் நிசர்க்கபலம் இவை என்பதும் கூறப்பட்டுள்ளன.

மூன்றாவது வியோனி சென்ம அத்தியாயத்துள் எழுவகைத் தோற்றத்தில் மக்கட் பிறப்பல்லாத பலவகை உயிர்களுடைய பிறப்பு கூறப்பட்டுள்ளன.

நான்காவது நிஷேக அத்தியாயத்துள் கருப்பம் உண்டாகும் காலம், புணர்ச்சி நிகழும் விதம், கருப்பந் தரித்தல், பீசபலம் சேத்திரபலம், மகிழ்நனுக்கும் மனைவிக்கும் நோய் உண்டாதல், இறப்பு உண்டாதல், பகலில் கர்ப்பதானம் ஆகப்பட்டவர்க்குக் காரகக் கோள்கள், இரவில் கர்ப்பாதானம் ஆகப்பட்டவர்க்குக் காரகக் கோள்கள், பெற்றோர்க்குச் சுகம் விளைதல், கருப்பம் உற்றாளுக்கு இறப்பு ஏற்படல், தாயும் சேயும் இறத்தல், தாயும் தந்தையும் இறத்தல், கருவியால் தாய் இறத்தல், கருப்பம் கலைந்து விழுதல், குழந்தை இறத்தல், தாய் இறத்தல், கருப்பம் நன்றாயிருத்தல், ஆண் பிறக்கும் அல்லது பெண் பிறக்கும் என்றல், நபுஞ்சகத் தன்மை உண்டாதல், இரட்டைக்குழந்தைகள் அல்லது மூன்று குழந்தைகள் அல்லது பல குழந்தைகள் பிறத்தல், ஒவ்வொரு திங்களிலும் கருவளரும் விதம், அத்திங்களுக்குரிய கோள்கள், குழந்தைக்கு உறுப்பு இரட்டுதல், குழந்தை பல் முளைத்தும் முடவனாகியும் சளனாகியும் குறளனாகியும் விழிகெட்டும் பிறத்தல், மகவு பிறக்குங்காலம், மகவு மூன்று யாண்டு கழித்தோ பன்னிரண்டு யாண்டு கழித்தோ பிறத்தல் என்னும் இவை கூறப்பட்டுள்ளன.

ஐந்தாவது சென்ம அத்தியாயமாகும். இது மகவு பிறத்தலைக் குறித்துப் பல செய்திகளைக் கூறுகிறது. பிறந்த மகவு தன் தந்தைக்குப் பிறந்ததா வேறொருவருக்குப் பிறந்ததா என்பது, மகவு பிறந்தபொழுது தந்தை எவ்விடத்திலிருந்தான் என்பது, மகவாய்ப் பிறக்காமல் பாம்பாகப் பிறப்பது, குழந்தை பாம்பு சுற்றிப் பிறப்பது,

இரண்டு கொடி சுற்றிப் பிறப்பது, மகவின் தொப்புட் கொடி இன்ன உறுப்பில் சுற்றியிருக்கும் என்பது, மகவு பிறந்த பொழுது தந்தை தன் தேயத்திலே அல்லது பரதேயத்திலே தளைபட்டிருந்தான் என்பது, நீர் நடுவே படகிலும் நீர்க்கரையிலும் சூட்சதலத்திலும் குழியிலும் மகவு பிறக்கும் என்பது, மகவு இன்ன இடத்திலே பிறந்திருக்கும் என்பது, தாய் பிறந்த மகவை இகழ்ந்து விடுதல், அக்குழந்தை ஆயுளுடனிருத்தல் தாயால் மகவு இறத்தல் மகவு பிறக்கும் பொழுது தாயின் சயன நிலை அங்கிருந்த விளக்கின் நிலை வீட்டின் வாயில் நிலை மனையின் நிலை மகவு பிறக்கும் பொழுது அவ்வறையில் தாயின் சயனம் இன்ன இடத்தில் இருக்கும் என்பன, கட்டில் நிலை தாயுடன் இருந்தவர் நிலை மகவின் உடலியல்பு உறுப்பின் இயல்பு மறுவும் விரணமும் உண்டாயிருத்தல் என்பன இவ்வத்தியாயத்துள் கூறப்பட்டுள்ளன.

ஆறாவது சத்தியோக (சத்தியே) மரண அத்தியாயமாகும். இதனுள் பிறந்த மகவு விரைவில் இறந்துவிடுதலும், சில காலம் இருந்து இறந்து விடுதலும், தாயும் மகவும் சாதலும், மகவு ஒரு யாண்டுக்குள் இறத்தலைச் சந்திரனைக் கொண்டு அறிதலும் ஆகியவை கூறப்பட்டுள்ளன.

ஏழாவது ஆயுர்த்தாய அத்தியாயமாகும். இதனுள் மயன் முதலானவரால் கூறப்பட்டுள்ள உச்ச நீச திசை (பிண்டாயுர்த்தாயம்) இலக்கினதிசை சீவ சன்ம திசை அம்சாயுர்த்தாயமாயகி அங்கிசதிசை என்னும் இவற்றைக்கொண்டு ஒருவருடைய ஆயுள் அளவு அறியும் முறைகள் கூறப்பட்டுள்ளன.

எட்டாவது திசாபல அத்தியாயமாகும். இதனுள் திசைகள் நடக்கும் முறை, திசையின் அபகாரங்கள், திசைகள் நற்பலனும் தீயபலனும் தருதல், ஆரோகண அவரோகண திசைகள், நன்றும் தீதும் கலந்து தரும் திசைகள், இலக்கின திசையின் நற்பலன் தீப்பலன்கள், நிசர்க்கதிசை, திசையின் தொடக்கக் காலத்தில் திசாபதியின் நிலையறிந்து பலன் கூறுதல் திசையின் தொடக்கக் காலத்தில் திங்கள் நின்ற நிலையினால் உண்டாகும் நற்பலன் தீயபலன்கள், சூரியன் திங்கள் செவ்வாய் புதன் குரு சுக்கிரன்

சனி என்னும் எழுவரின் திசைப்பலன்கள், திசைக்குப் பலன் கூறும் முறைமை, சுபபலமுடையவன் திசை நன்மை தரும் என்றல் வீரியமில்லாதவர் திசை சுபபலன் தராதென்றல், கூடியுள்ள கோள்கள் பலன் தரும் முறை என்னும் இவைகள் கூறப்பட்டுள்ளன.

ஒன்பதாவது அட்டவர்க்க அத்தியாயமாகும். இதனுள் ஆதித்தன் முதலான கோள்களின் அட்டவர்க்கங் கொள்ளும் முறை கூறப்பட்டுள்ளது.

பத்தாவது கன்ம சீவத் திரவியாகம் சித்தி அத்தியாயமாகும். இதனுள் ஞாயிறு முதலான கோள்களால் பொருள் வருவாய் அறிதலும், பத்தாமதிபன் நின்ற நவாங்கிசத்தால் தொழில் அறிதலும், பொருள் தருங்கோள் தன்வலிவிற்கும் தான் இருக்கும் இடத்திற்கும் தக்கவாறு பொருள் வருவாயை உண்டாக்குதலும் ஆகியவை கூறப்பட்டுள்ளன.

பதினொன்றாவது இராச யோக அத்தியாயமாகும். இதனுள் தொகுப்பாகவும் தனியாகவும் பலவகை இராச யோகங்கள் கூறப்பட்டுள்ளன.

பன்னிரண்டாவது நாபச யோக அத்தியாய மாகும். இதனுள் ஆகிருதி, சங்கியை, ஆசிரயம், தெலம் என்னும் நான்கு வகையான நாபச யோகங்கள் கூறப்பட்டுள்ளன. கோள்களின் கூட்டுறவைக் கருதாமல் அவை நிற்கும் இட வேறுபாட்டாற் கொள்வனவே நாபச யோகமாகும்.

பதிமூன்றாவது சந்திர யோக அத்தியாயமாகும். இதனுள் சந்திரனைக் கொண்டு கூறப்படும் அதம மத்திம வரிட்ட யோகங்களும், அறியோகமும், சுனபை அனபை துருதுரா யோகங்களும் அவற்றின் வேறுபாடுகளும், கேமத் துரும யோகமும், யோகாதிபதிகளின் பலமும், சந்திரன் திரிசியார்த்தத்திலும் அதிரிசியார்த்தத்திலும் நின்றால் தரும் பலன்களும் கூறப்பட்டுள்ளன.

பதினான்காவது துவாக்கிரக யோக அத்தியாயமாகும். இதனுள் ஞாயிறு முதலான கோள்கள் இருவர் இருவராய்க் கூடி நிற்பின் உண்டாகும் பலன்கள் கூறப்பட்டுள்ளன.

பதினைந்தாவது பிரவிரச்ய யோக அத்தியாயமாகும். இதனுள் பலவகைச் சமய நெறியோர் கூறும் வீடுபேறு (பிரவிரச்சை) உண்டாகும் யோகம் கூறப்பட்டுள்ளது.

பதினாறாவது இராசி சீல அத்தியாயமாகும். இதனுள் அசுவதி முதலான நாள்களில் பிறந்தாருக்கு உண்டாகும் பலன்களும், மேடம் முதலான இராசிகளில் திங்கள் நிற்பின் உண்டாகும் பலன்களும், சூரியன் முதலான கோள்கள் மேடம் முதலான இராசிகளில் நிற்பின் விளையும் பலன்களும் கூறப்பட்டுள்ளன.

பதினேழாவது திருட்டி பல அத்தியாயமாகும். இதனுள் மேடம் முதலிய இராசியிலுள்ள திங்களைப் கோள்கள் நோக்கிய பலனும் ஓரை திரைக்கரணம் துவாதசாமிசம் நவாமிசம் இவற்றிலுள்ள திங்களுக்குச் செவ்வாய் முதலிய கோள்களின் நோக்கம் ஏற்படுவதால் உண்டாகும் பலனும் மேற் கூறிய நவாமிச நோக்கு வேறுபாடுகளும் கூறப்பட்டுள்ளன.

பதினெட்டாவது பாவபல அத்தியாயமாகும். இதனுள், ஞாயிறு முதலான கோள்கள் இலக்கினபாவம் முதலிய பாவங்களிலிருப்பின் கொடுக்கும் பலனும், கோள்கள் பாவங்களில் நின்று பலன் கொடுக்கும் முறையும் கூறப்பட்டுள்ளன.

பத்தொன்பதாவது ஆசிரய யோக அத்தியாயமாகும். இதனுள் ஆட்சி, நட்பு, உச்சம், பகை, நீசம் என்னும் ஐவகை நிலையில் ஒன்று முதலான கோள்களிருப்பின் தரும் பலனும், கும்ப இராசியிற் பிறந்தவனைப் பற்றிய கருத்து வேறுபாடும் ஓரைகளில் கோள்கள் நின்ற பலனும், திங்கள் திரேக்காணத்திலும் நவாமிசத்திலும் துவாதசாமிசத்திலும் நின்று பலன் தரும் வேறுபாடும் செவ்வாய் முதலிய கோள்கள் தனது திரிம்சாமிசத்தில் நின்று தரும் பலனும் கூறப்பட்டுள்ளன.

இருபதாவது பிரகீரண விதான நாம அத்தியாயமாகும். இது தான காரகபல அத்தியாய மென்றும் வழங்கப்படும். (பிரகீர்ணகம்-பலவகைப்பட்ட பொருள்கள்) இதனுள் கோள்கள் ஒருவருக் கொருவர் சகாய காரகராயிருத்தலும், வர்கோத்தமத்திலும் வேசித்தானத்திலும் கேந்திரங்களிலும் உள்ள கோள்கள் நற்பலன் தருவர் என்றலும், கோள்கள் முதல் நடு அந்தத்தில் பலன் தருதலும் கூறப்பட்டுள்ளன.

இருபத்தொன்றாவது அரிட்ட யோக அத்தியாயமாகும். இதனுள் தனக்கும் மனைவி முதலானவர்க்கும் உண்டாகும் பலவகை அரிட்டங்கள் கூறப்பட்டுள்ளன.

இருபத்திரண்டாவது ஸ்திரீசாதக அத்தியாயமாகும். இதனுள் பெண்கள் சாதகத்திற்கு மட்டும் கூறப்படும் சிறப்பான பலன்கள் கூறப்பட்டுள்ளன.

இருபத்து மூன்றாவது துன்மரணயோக அத்தியாயமாகும். இதற்கு நிரியாண அத்தியாயம் என்றும் பெயர் உண்டு. இதனுள் ஒருவற்கு இறப்பு நிகழும் இடமும், இறப்பு உண்டாகும் வகையும், மரணகால மயக்கம் நிகழும் கால அளவும், இறந்த பின்னர் உடம்பிற்கு ஏற்படும் நிலையும், முன் பிறப்பு இனி வரும் பிறப்பு என்னும் இவற்றைப் பற்றிய செய்தியும், இறந்த உயிர் அடையும் கதி வேறுபாடுகளும் சொல்லப்பட்டுள்ளன.

இருபத்து நான்காவது நட்ட சாதக அத்தியாயமாகும். இதனுள் கருப்பாதான காலமும் பிறப்பும் காலமும் அறியப்பெறாத ஒருவன் தன் பிறப்புப் பற்றிய செய்திகளை அறிய விரும்பி வினவின் அவற்றைக் கணித்து அறியும் முறைகள் கூறப்பட்டுள்ளன.

இருபத்தைந்தாவது திரேக்காம சொரூப அத்தியாயமாகும். இதனுள் ஒரு இராசியை மூன்று கூறு செய்து அறியப்படும் முப்பத்தாறு திரேக்காணங்களின் வடிவு கூறப்பட்டுள்ளன. மேலும் இந்த அத்தியாங்களின் ஈற்றிலே இந்நூலிற் கூறப்பட்டுள்ள

அத்தியாயங்களின் பெயரும் இந்நூலினை வடமொழியிலும தமிழிலும் செய்தார் இன்னார் என்பது கூறப்பட்டுள்ளன.

இந்நூலைப்பற்றிய சில கருத்துக்கள். வராகர் ஓரையில் ஞாயிறு முதலான ஏழு கோள்களைக் கொண்டே பலன்கள் கூறப்பட்டுள்ளன. ஆனால், கோள்களின் பெயர்களைக் கூறும் பொழுது, அரவு சர்ப்பம் அசுரன் அரா இராகுப் பெயராம் சிகி கேதாம் (25) என்று இராகு கேதுப் பெயர்கள் கூறப்பட்டுள்ளன. அரிட்ட யோக அத்தியாயத்தில் உடுபதி அசுரன் தன்னோடு (319) என்று இராகு கூறப்பட்டுள்ளது. ஆனால் இந்நூலின் உரையாசிரியர் அசுரன் என்பதற்கு இராகு அல்லது கேது என்று உரை எழுதியுள்ளார். இவ் விரண்டு இடங்களைத் தவிர்த்த இராகு கேதுக்கள் இந்நூல் எங்கும் எடுத்தாளப்பெறவில்லை. இக்காலத்துச் சோதிடர்களால் கையாளப்பட்டு வரும் உடுமகா திசையும் காலச் சக்கிர திசையும் இந்நூலுள் எடுத்தோதப்படவில்லை. என்றாலும் சோதிட நுணுக்கங்களை அறிந்துகொள்ள விரும்புகின்றவர்க்கு இந்நூல் மிகமிகப் பயன் தருவதாகும்.



உ

இறைவன் துணை

**இலிங்கன் இயற்றிய**

# வராகர் ஓரா சாத்திரம்

முதலாவது

## இராசி பேத அத்தியாயம்

**பாயிரம்: காப்பு**

1. உலகெலாம் பூத்துக் காத்தும்
அழித்தலு முடையோ னாகி
நிலவுறும் மூர்த்தி யாகிப்
பிறப்பிறப் பிலனாய் நின்றும்
அலகறு சோதி யாகி
அணுமுத லெவையு மாகிக்
கலைகளின் முடிவாய் நின்ற
கதிரினைச் சிந்தை செய்வாம்.

* (என்பது) எல்லா உலகங்களையும் மலர்வித்தும் காத்தும், பின்னர் அவற்றை அழித்தலும் உடையவனாகி, என்றும் விளங்குகின்ற வடிவுடையனாகி, வடிவுடையார்க்கு உண்டாகும் பிறப்பும், இறப்பும் இல்லாதவனாய் நின்றும், அளவிறந்த ஒளியாகி அணுமுதலான எப்பொருளுந் தானாகிக் கலைகளின் பொருண் முடிவாய் நிற்கிற ஞாயிறு என்னுந் தெய்வத்தை இந்நூல் நிறைவு

---

*குறிப்பு: இந்நூற் சுவடியில் இது முதல் மூன்று பாடல்களுக்கு உரையில்லை. அவற்றிற்குப் பதிப்பாசிரியனால் உரை எழுதிச் சேர்க்கப்பட்டுள்ளது. "உம்மையில்' என்னும் 4-ஆம் பாட்டிலிருந்தே பழைய உரை உள்ளது.

பெறுதலைக் கருதிச் சிந்தித்து வணங்குதலைச் செய்வாம். (என்றவாறு)

இது இந்நூலிற்கு ஏற்புடைக் கடவுள் வாழ்த்தாகும். கதிரவன் படைத்தல் முதலிய முத்தொழில் செய்கின்றான் என்பதை "நீராகி நிலம் படைத்தனை, நெருப்பாகி நீர் பயந்தனை, ஊழியிற் காற்றெழுவினை, ஒளி காட்டி வெளி காட்டினை, கருவாயினை, விடராயினை, கதியாயினை, விதியாயினை, உருவாயினை, அருவாயினை, ஒன்றாயினை, பலவாயினை" என்னும் பாட்டால் அறிக. (தொல் செய்யுளியல்-பேராசிரியர் உரை 146)

சூரியனைத் தெய்வமாகக் கருதி வழிபடுஞ் சமயத்தைச் சௌர சமயம் என்பர். இச்சமய நெறியினை-

"உதயந்தனி லயனாய்வரு முயிர்காவலி லரியாய், வதைதந்திடி னரனாய்வரு மாலும்பிற வங்ஙன், இதயங்களி னிவனே யிறை யெவையெங்கணு மிவனே, கதை யென்றறி காணாவிறை காணும் மிறை கதிரோன்."

"அறியாத வண்ண மணுமேரு வாக வணுவாயடங்கி யருளும், பிறியாத வண்ட பகிரண்ட மந்த வணுவாக வேபெருகிடுங், குறியா லமைந்த நெறியாகி நின்று குருவாகி வந்த குறுகும், செறிவா னிறைந்தசிவமா யமர்ந்து தெளிவாய வன்றினகரன்." என்னும் பெருந்திரட்டுப் பாடல்களால் அறிக.

ஏட்டில் இந்நூற்பெயர் வராகர் ஓராசாரம், வராகர் ஓரா சாத்திரம் என்று, இரண்டு விதமாக எழுதப்பட்டுள்ளது. ஆராய்ந்து பார்த்ததில் இது வராகர் ஓரை என்னும் பிருகத் சாதகமே என்று தெளிவாக விளங்குகிறது. வராகமிகிரர் புதல்வன் பிருதுயசஸ் என்பவர் இயற்றியதே ஓராசாரமாகும்.

## தற்சிறப்புப் பாயிரம்

2. ஓரையாங் கடல்க டக்க
வுத்தியின் வல்லோர் சொன்ன
வேர்தரு சாத்தி ரத்தை
விருத்தவித் தார மாக

ஆரிய வராகர் கூற
வம்மணி யழுத்த லேபோல்
பாரினல் லவனி லிங்கன்
தமிழினாற் பகர லுற்றேன்.

(எ-து) ஓரா சாத்திரமாகிய பெருங்கடலைக் கடந்து செல்வதற்குக் கலம்போல், பொருந்தும் நெறியினையறியும் அறிஞர் கூறிய மூல நூல்களின் சாரத்தை விருத்த யாப்பால் விரிவாக வடமொழிக்கண் வராக முனிவர் கூறியருள, அழகிய ஒன்பது மணிகளைத் தேர்ந்தெடுத்து அருங்கலஞ் செய்யும் பொன்வினைஞர் செயல்போல, இந்நிலவுலகத்தில் நல்லவன் மகனாகிய இலிங்கன் என்பேன்.(அவ்வரசர் ஓரா சாத்திரத்தைத்) தமிழ் மொழியினால் மொழிபெயர்த்துக் கூறத் தொடங்கினேன் (எ-று)

வேர்தரு சாத்திரம் - மூலநூல்

## அவையடக்கம்

3. ஒருஞ்சோ திடம் தென்னு
முத்திக்கோர் கலம தாக
ஆரியந் தனில்வ ராகர்
அறைந்தன ரதனை யானும்
தேர்கிலேன் புன்சொற் கொண்டு
சிறப்புடன் விரிப்ப வெண்ணல்
சூரியற் கெதிரே மின்மின்
துணைச்சிறை விரித்த லொப்பாம்.

(எ-து) ஆராய்ந்து உணரப்படும் சோதிடம் என்னும் கடலினைக் கடப்பதற்கு மரக்கலம் போன்றதாக, ஆரியமொழியில் வராகமுனிவரர் வராகர், ஓரை என்னும் பெயரால் சிறந்த நூலொன்றினை இயற்றியருளினார், அச்சிறந்த நூலினை அறிவிற் சிறி.யேனாகிய யானும் தெளிவாக ஆராயும் ஆற்றலின்றி, என்

நாவிற்றோன்றும் புன்மையான சொற்களைக்கொண்டு அந்நூலினைச் சிறப்பாக விரித்துக் கூற எண்ணுதல் எதுபோலுமெனின்? ஆயிரம் கதிரினை யுடைய சூரியனுக்கு முன்னர் அதற்கு ஒப்பாக மின்மினிப் பூச்சி யொன்று அதன் இரண்டு சிறகுகளையும் விரித்துப் பறந்து சென்றாற் போன்றதாம். ஆதலின் அறிவிற் சிறந்த அவையத்தீரே! என் புன்மையைப் பொறுத்து அருள்புரிவீராக (எ-று)

## நுதலிய பொருள்

4. உம்மையின் புண்ணி யங்கள்
பாவங்க ளுணர்ந்தீ ரைந்தால்
இம்மையிற் சுபாசு பங்க
ளேழ்சுகம் புண்ணி யங்கள்
தம்மினாற் றசாப லங்கள்
சமயோக மட்ட வர்க்கம்
கொம்மைவெம் முலையி னாய்கேள்
குவலயத் துரைக்க லுற்றேன்

(எ-து) பூர்வ சென்மத்திற் செய்த புண்ணிய பாவங்கள் பத்தாமிடங்கொண் டறிந்து, இச்சென்மத்தில் அந்தப் புண்ணிய பாவங்கள் அனுபவம், நன்மையுந் தீமையும் ஏழாமிடத்தினாலும், நான்காமிடத்தினாலும் அறிந்து, பூர்வ சென்மத்திற் செய்த புண்ணியம் அனுபவிக்கிற காலம் புண்ணிய திசா பலத்தினாலும், பூர்வ சென்மத்திற் செய்த மத்திம பலங்கள் யோக பலத்தினாலும், பூர்வ சென்மத்திற்செய்த புண்ணிய பாவங்க ளிரண்டும் அனுபவிக்கிற காலம் அட்டவர்க்கத்தினாலும் உணர்ந்து பூமியிலுள்ளபேர்க்கு அறியத்தக்கதாகச் சொல்லுவேன். (எ-று)

இப்பாட்டில் "சம யோகம்' என்பதைச் சமமும் யோகமும் என்று பிரித்துக்கொள்க. சமம், இங்கே மத்திம பலன்கள் என்னும் பொருட்டு.

# 5

## கால புருடனுடைய உறுப்பும், நவாம்சமும் இராசியின் பொதுப்பெயரும்

5. சிரமுக முரச்சு நெஞ்சு
திகழ்வயி றரைநா பிக்கீழ்த்
தருகுறி யூரு சானு
சங்கந்தாட் டுணைமே டாதி
புரவிமுன் கால்க ளியாவும்
கிரியாதி புகுமி ருட்சம்
கிரகஞ்சேத் திரம்பம் மோரை
கிளத்திய பவனம் ராசி.

(எ-து) தலை, முகம், உரச்சு (மார்பு) இருதயம், வயிறு, இடை, நாபிக்குங் கீழ் (வஸ்தி) இலிங்கம்,இரண்டு துடை, இரண்டு முழங்கால், இரண்டு கணைக்கால், இரண்டு பாதம் இவை பன்னிரண்டும் மேடம் முதல் மீனம் ஈறாகப் பன்னிரண்டும் அடைவிலே கொள்வது.

அசுவதிமுதல் நட்சத்திரம் இருபத்தேழுக்கும் ஒரு நட்சத்திரத்திற்கு நான்கு காலாக இருபத்தேழு நட்சத்திரத்திற்கும் நூற்றெட்டு காலுக்கும் அசுவதி முதல் மும்மூன்று நாளைக்கும் மேடமுதற் பன்னிரண்டு இராசியும் அடைவிலே ஒட்டிக்கொள்வது.

இராசியின் பெயர் இருட்சம், கிரகம், சேத்திரம், பம், ஓரை இவை இராசியின் பொதுப் பெயர் (எ-று)

**குறிப்பு**:- மிதுனத்திற்கு மார்பு கூறப்பட்டிருப்பினும் கை, கழுத்து, தோள் இவற்றையும் சேர்த்துக் கொள்க. "சங்கம் கணைக்கால்" (பிங். 5-275) புரவி-அசுவதி. மேடம் முதலிய எல்லா

இராசிகட்கும் ருட்சம், பவனம் என்ற பெயர்களும், வீட்டின் பரியாயப் பெயர்களான கேசம், வேஸ்மம், திஷ்ணியம், ஸத்மம், மனை, நகர், சேர்பு, வசதி, அகம், இல், புரையுள், பாத்தி, புக்கில், இல்லம், உறையுள், பதி, மாடம், குலம் முதலிய பெயர்களும் வழங்கப்படும்.

பிங்கல நிகண்டு "இல்லும் ஓரையும் பவனமும் இராசி" என்று இராசியின் பொதுப்பெயரைக் கூறுகின்றது.

## இராசிகளின் வடிவம்

6. மச்சமீன் குடந்தான் கும்பம்
மனிதன்பெண் கதையா ழேந்து
மச்சதா மிதுனஞ் சாபம்
மனிதன்முன் னசுவம் பொற்பின்
வைச்சுட லிடங்கர் மானின்
முகம்மக ரந்து லாத்தான்
நச்சுப்பெண் பயிர்வி ளக்காள்
நாமம்மற் றவைகட் காமே.

(எ-து) மீன இராசி என்பது இரண்டு மீன்கள், அதன் தலையில் இதன் வாலும், இதன் தலையில் அதன் வாலு மாகும்படி மாறுபாடாக விருக்கும் கும்பம் என்பது குடமாகும், புருடனொருவன் தண்ணீர்க் குடங்கொண்டு தண்ணீர்க்குப் போகிறவனாயிருப்பன், மிதுனம் என்பது ஆணும் பெண்ணுமாய்ப் புருடன் கையில் தண்டும், பெண்ணின் கையில் யாழும் பிடித்து இருவரும் ஒரு ஆசனத்தில் இருக்கும் வடிவாம், தனுசு என்பது அரைக்குமேல் புருடனைப்போல் விளங்கி வில்லும் அம்பும் எடுத்து அரைக்குங்கீழ் குதிரை வடிவாயிருப்பது. மகரம் என்பது முகம் மானின் முகமாய் உடல் மகரம் என்னப்பட்ட முதலை வடிவாயிருக்கும். துலாம் என்பது துலாக்கோல் பிடித்துக்கொண்டு

கடை வீதியில் நிற்பானொரு புருடன் போலிருப்பது. கன்னி என்பது பெண்ணாகும். ஒரு கையில் முளைப் பாலிகையும் ஒரு கையில் நெருப்பையும் பிடித்துக்கொண்டு ஓட மேறிக்கொண்டு இருப்பவள்போ லிருப்பது. "நாமம் மற்றவைகட் காமே" என்ற அதனால், மேடம் ஆடு, இடபம் எருது, கடகம் நண்டு, சிங்கம் சிங்கம், விருச்சிகம் தேள் என்றறிவது (எ-று)

## இராசி அதிபதிகளும் நவாங்கிச பதிகளும், நவாங்கிசத்தை எண்ணுவதும், துவாதசாங்கிசமும்

7. ஆரல் புகர்மால் மதிபருதி
யருணன் புகர்சேய் பொன்சனிசுன்
ஓர்பொன் கிரகாங் கிசபதிகள்
உணர்க வடைவே நவாங்கிசங்கள்
சாரும் மேடம் மகரதுலாம்
கடகந் தனது பவனாதி
சேருந் தத்தங் கிரகாதி
செப்புந் துவாதச சாங்கிசமே.

(எ-து) செவ்வாய், சுக்கிரன், புதன், சந்திரன், சூரியன், புதன், சுக்கிரன், செவ்வாய், வியாழன், சனி, சனி, வியாழன் என்று கூறிய ஒழுங்கிலே மேடாதி பன்னிரண்டு இராசிகட்கும், அந்தந்த அங்கிசங்கட்கும் இவர்கள் அதிபதிகளாவார்.

நவாங்கிசம் அறியும்படி மேடம், மகரம், துலாம், கடகம் என்ற அடைவிலே இந்த இராசிகள் அடைவிலே நாலும் அந்த இராசிக்கு அந்த இராசிமுதல் அடைவிலே ஒட்டிக்கொள்வது.

துவாதசாங்கிசம் அந்த இராசி முதல் பன்னிரண்டு இராசியும் அடைவிலே ஒட்டிக்கொள்க (எ-று)

**குறிப்பு**:- மேட இராசிக்கு மேடம் முதலாகவும், இடபத்திற்கு மகரம் முதலாகவும், மிதுனத்திற்குத் துலாம் முதலாகவும், கடகத்திற்குக் கடகம் முதலாகவும், நவாம்சத்தைக் கண்டு கொள்க. இம்முறை போலவே சிங்கம் முதலான இராசிகட்கும் மேடாதிபதியாக நவாம்சத்தை அறிந்து கொள்க.

துவாதசாங்கிச மாவதுஓர் இராசியைப் பண்ணிரண்டாகப் பிரித்தது, அஃதாவது ஒரு இராசியிலுள்ள முப்பது பாகையைப் பன்னிரண்டாகப் பிரித்துவிடின் ஒரு பாகம் இரண்டரைப் பாகையாகும். இப் பன்னிரண்டனுள் எந்தப் பாகத்திற்கு கிரகம் நின்றதென்றறிந்து அந்தப் பாகத்தைக் கிரகம் நின்ற இராசியிலிருந்து எண்ணி அறிவதாம். இதனை,

"உன்னிய துவாத சாங்கிசங் கூறு லொருராசி முப்பது பாகைத் தன்னிலோ ரங்கிச மிரண்டரைப் பாகைத் தானென்றிவ் வடைவினிற் கொண்டு, பன்னியே பார்க்கி லிராசியே முதலாய்ப் பன்னிரண் டங்கிசமேவத், துன்னியக் கிரக மிருந்தவங் கிசமே துவாத சாங்கிசமெனச் சொல்வர்." (102) - என்னும் சாதக சிந்தாமணிப் பாட்டால் அறிக.

**திரிம்சாங்கிசமும், இராசிச் சந்தியும்**

8. ஓசந் தனிற்சே யைந்துசனி
யைந்தொண் பொன்னோ ரெட்டாகும்
வீசும் மாலேழ் புகரைந்தாம்
மேவுக் குமமே விபரீதம்
தேசி யிவைகள் திரீங்கிசமாம்
பாகங், கடகந் தேள்மீனம்
பேசு மிவற்றி னந்தங்கள்
இராசிச் சந்தி யெனும்பேரே.

(எ-து) திரிங்கிசாங்கிசம் அறியும்படி ஓச இராசிக்குரிய முப்பது பாகமும் (பாகையையும்) செவ்வாய்க்கு ஐந்து, சனிக்கு ஐந்து, வியாழனுக்கு எட்டு, புதனுக்கு ஏழு, சுக்கிரனுக்கு ஐந்து இவ்வகையாலே அடைவே ஓட்டிக்கொள்வது.

உக்கும இராசிக்குரிய முப்பது பாகமும் (பாகையும்) விபரீதமாய் வரும். அவையாவன, சுக்கிரனுக்கு ஐந்து, புதனுக்கு ஏழு, வியாழனுக்கு எட்டு, சனிக்கு ஐந்து, செவ்வாய்க்கு ஐந்து என்ற அடைவிலே ஒட்டிக்கொள்வது.

கர்க்கடகம், விருச்சிகம், மீனம் என்னும் இந்த இராசிகளின் அந்திகள் (கடைசிப்பாகம்) ராசிச் சந்தி என்னும் பெயராகும். (எ-று)

**குறிப்பு**:- மேடம், மிதுனம், சிங்கம், துலாம், தனுசு, கும்பம் என்னும் ஆண் இராசிகட்கு ஐந்து பாகைவரையிற் செவ்வாயும்,பத்துபாகை வரையிற் சனியும், பதினெட்டு பாகை வரையில் வியாழனும், இருபத்தைந்து பாகைவரையிற் புதனும், முப்பது பாகைவரையிற் சுக்கிரனும் திரிம்சாங்கி சாதிபர் ஆகின்றனர்.

பெண் இராசியான இடபம், கடகம், கன்னி, விருச்சிகம், மகரம், மீனம் என்னும் இவைகட்குத் தலைகீழாகக் கொள்ள வேண்டும். எவ்வாறெனின்? ஐந்துபாகை வரைச் சுக்கிரனும், பன்னிரண்டு பாகைவரையிற் புதனும், இருபது பாகைவரையில் வியாழனும், இருபத்தைந்து பாகைவரையிற் சனியும், முப்பது பாகைவரையிற் செவ்வாயும் திரிம்சாங்கிசாதிபர் ஆகின்றனர்.

**இராசிச் சந்தியாவன:** கடகம், விருச்சிகம், மீனம் என்னும் இந்த இராசிகளின் கடைசி நவாம்சம் இராசிச் சந்தியாகும். இதற்கு இருட்ச சந்தியென்றும், கண்டாந்த மென்றும் பெயர். இக் கண்டாந்த சந்தியிற் பிறந்த குழந்தை தாய் தந்தையர்க்கும் குலத்திற்கும் அழிவினைத் தருவதாயிருக்கும். அக்குழந்தை உயிருடனிருப்பின் பல யானை குதிரைகளுடன் கூடிய மன்னனாகவே, மன்னனால் விரும்பப்பட்டவனாகவோ யிருக்கும். (சாராவளி-அத். 3-சு-20, 21) இதனை "ஈனமா மிராசிச் சந்தில் ஏந்தலே தோன்று மேனும், தானவை திரிகோ ணத்திற் றந்தைகே யரிட்ட மாமே" (1210) என்னும் சாதக சிந்தாமணியால் அறிக.

## மேடம் முதலான இராசிகளின் பெயர்

9. கிறிந்தா புருசு தூமம்
கிளத்திய குளீர மோடு
பறைதரு லேயந் தானும்
பார்த்தூநஞ் சூகங் கோர்ப்பி
எறிதவுட் சிகமு மாகே
கேரமே யிருது ரோகம்
செறியுசேத் தசியீ ராறும்
மேடாதி செப்பு நாமம்

(எ-து) கிரியம், தாபுரு, சுதுமம், குளிரன், இலேயம், பார்த்தோனம், சூகம், கோர்ப்பி, தவுட்சிகம், ஆகேகேரம், இருதுரோகம், சேத்தசி இவை பன்னிரண்டும் மேடாதி இராசி பன்னிரண்டிற்கும் அடைவிலே பெயராம் (எ-று)

**குறிப்பு**:- ஜூதுபம் என்பது சுதுமம் என்றாயிற்று. ஜூகம் என்பது சூகம் என்றாயிற்று. தௌர்க்ஷம் என்பது தவுட்சிகம் என்றாயிற்று. ஹிருத்ரோகம் என்பது இருதுரோகம் என்றாயிற்று. சேத்தசி என்பது அந்தியம் என்றும் வழங்கும். இவை வடமொழிப் பெயர்கள்.

## ஆறு (சட்) வர்க்கங்கள்

10. பவனமொன் றிருகூ றேரை
பகர்திரேக் காண மூன்றாம்
நவமது நவாங்கி சங்கள்
நவில்துவா தசாங்கி சங்கள்
அவைபனி ரண்டு கூறாய்
அறிதிரீங் சாங்கி சங்கள்
தவறில்முப் பஃதாம் பாகை
யெண்ணிடுஞ் சட்டு வர்க்கம்

(எ-து) பவனமாவது சேத்திர மாம். ஒரு இராசியை இரண்டு கூறு செய்தது ஓரை யாம். ஒரு இராசியை மூன்று கூறு செய்தாற் றிரேக்காண மாம். ஒரு இராசியை ஒன்பது கூறு செய்தால் நவாங்கிச மாம். ஒரு இராசியை பன்னிரண்டு கூறு செய்தாற் றுவா தெசாங்கிச மாம். ஒரு இராசியை முப்பது கூறு செய்தால் திரீங்கிசாங்கிச மாம் என்பது.

இவ்வகையாலே சேத்திரம், ஓசை, திரைக்கரணம் நவாங்கிசம், துவாதசாங்கிசம், திரீங்கிசாங்கிசம் (என) ஒரு இராசிக்குப் பிரித்துக்கொண்டது சட்டு வர்க்கமாம் (எ-று.)

**குறிப்பு:-** சேத்திரம் என்றது இலக்கணத்தை. இலக்கினம், திரைக்கரணம், நவாம்சம், தசாம்சம் ஓரை, திரிம்சாம்சம், சப்தாம்சம், சஷ்டி அம்சம், கலாம்சம், துவாதசாம்சம் என்னும் இவற்றைத் தசவர்க்கம் என்பர். சிலர் தசாம்சம், சஷ்டி அம்சம், கலாம்சம் என்னும் மூன்றை நீக்கி ஏழு வர்க்கம் (சப்த வர்க்கம்) கொள்வர். இன்னுஞ் சிலர் ஏழில் சப்தமாம் சத்தை நீக்கி ஆறு வர்க்கங் கொள்வர். இந் நூலாசிரியர் ஆறுவர்க்கமே கூறுகின்றனர்.

## நிசி யிராசியும், திவா விராசியும். சிரேதய இராசியும், பிருட்டோதய இராசியும், இருபுறமும் உதிக்கும் இராசியும்

11. மாறுடை மறிமுன் னான்கும்
மான்றனு நிசியி ராசி
கூறிய அரிமுன் னான்கும்
கும்பமீன் திவாவி ராசி
வீறுடை அரிபெண் கோல்தேள்
மிதுனஞ்சால் சிரோத யங்கள்
பேறிரு புறமீன் தோன்றும்
பின்னெழும் மற்றை யோரை.

(எ-து) மேடம் முதல் நான்கும், மகரமும், தனுவும் நிசி இராசி, நிசி இராசி யென்பது இராத்திரியில் பலமுள்ள இராசியாம். சிங்கம் முதல் நான்கும், கும்பமும், மீனமும் ஆகிய இவை திவாபல இராசியாம், திவாபல இராசி யென்பது பகற்காலத்திற் பலமுள்ள இராசியாம்.

சிங்கம், கன்னி, துலாம், விருச்சிகம், மிதுனம், கும்பம் என்னும் இவை சிரோதய இராசிகளாம். மீனம், சிரம்,பிருட்டம் என்னும் இருபுறமும் உதிக்கும் இராசியாம். மற்ற இராசிகளெல்லாம் பிருட்டோதய இராசியாம் (எ-று).

**குறிப்பு**:-' மேடம் முதல் நான்கும், தனுசு முதல் இரண்டும் சந்திரன் இனமாய் இரவில் விழிக்கு மென்றும், சிங்கம் முதல் நான்கும், கும்பம் முதல் இரன்டு இராசியும் அருக்கன் கூறாய் பகல் விழிக்கு மென்றுஞ் சொல்வது" என்று சூடாமணி உள்ளமுடையான் 48-ஆம் பாட்டின் உரை கூறும்.

சிரோதய இராசிகளிலுள்ள கோள்களின் திசா புத்திகள் நடந்தால் தொடக்கத்திலும், பிருட்டோதய இராசிகளுள்ள கோள்களின் திசா புத்திகள் நடந்தால், கடைசியிலும், சிரபிருட்டோதய இராசியிலுள்ள கோள்களின் திசா புத்திகள் நடந்தால் இடையிலும் தாம் கொடுக்க வேண்டிய நற்பலனையோ தீயபலனையோ தருவார்கள் என்று கூறும் பலதீபிகை (அத்.-20- சுலோ-33).

சிலர் மிதுனவிராசியைச் சிரபிருட்டோதய மென்பர்.

12.. ஓசமுக் குமங்கு ரூரம்
சவுமிய மாண்பெண் ணொட்டு
தேசரந் திரோப யங்கள்
திரிகோணந் தகர்முன் னான்குங்

காசில்பூ ருவமுன் னேரைக்
கும்மதி யோச முக்குமம்
ஏசினந் தருக்கன் ஒன்றைந்
தொன்பதாந் திரேக்கா ணேசர்.

(எ-து) மேடாதி பன்னிரண்டு இராசியும் ஓசமென்றும், உக்கும் மென்றும் அடைவிலே ஒட்டிக்கொள்ளவும், ஓசம் குரூரம், உக்குமம் சவுமியம், அன்றியும் ஓசம் ஆண், உக்குமம் பெண்ணென் றறிவது.

மேடாதி பன்னிரண்டு இராசியும் சரம், திரம், உபயம் என்று அடைவிலே ஒட்டிக்கொள்ளவும். திரிகோணம் மேட முதல் நாலுக்கும் பூர்வதிசை (பூர்வாதி திசை) நாலும் அறியவும். பூர்வம்-கிழக்கு,அஃதாவது, மேட சிங்கந் தனுசு கிழக்கு, இடப கன்னியா மகரந் தெற்கு, மிதுன துலா கும்பம் மேற்கு, கர்க்கடக விருச்சிக மீனம் வடக்குத் திக்கு என்றறிவது.

ஒரு இராசியை இரண்டு (கூறு) செய்தது ஓரை, ஓசையி ராசிக்கு முற்கூறு சூரியன், பிற் கூறு சந்திரன், உக்கும் விராசிக்கு முற்கூறு சந்திரன்,பிற்கூறு சூரியன் என்று ஒட்டுவது.

திரேக்காணம் ஓர் இராசியை மூன்று கூறு செய்தது, திரேக்காண முதற் கூறு அந்த இராசிக்கு உடையவன், இரண்டாங் கூறு ஐந்தாம் இராசிக்கு உடையவன், மூன்றாங் கூறு ஒன்பதாம் இராசிக்கு உடையவன், இந்த அடைவிலே ஒட்டிக்கொள்க. (எ-று)

இந் நூலாசிரியர் கூறியவாறே

"உரைத்திடிலோ ரிராசியொரு மூன்று கூறாம்
ஓரையுடயவனுண்ணும் முதல்அஞ்சாம்ஓரை,

கருத்துடைய நடுவொன்பான் ஓரை காப்போன் கடை
புண்ணுந் திரேக்காண மிவை"

என்று சூடாமணி உள்ளமுடையான் ஆசிரியரும் கூறுவர். இப் பாட்டின் பொருள் ஒரு இராசியை மூன்று கூறாக்கி இராசியுடையவன் முதற் கூறு உண்ணும், ஐந்தாமிராசி யுடையவன் நடுவிற்கூறு உண்ணும், ஒன்பதாம் இராசியுடையவன் கடைக்கூறு உண்ணும். இவ்வகை எல்லா இராசிகளுக்குந் திரேக்காணம் ஒட்டிக்கொள்வது என்பதாம்.

ஆனால், வீமேசுர உள்ள முடையான், "சரராசியாகில் முற் கூறு இலக்கினாதிபன், நடுகூறு ஐந்தாம் இராசியாதிபன், கடைக்கூறு ஒன்பதாம் இராசி அதிபன் பொசிப்பன். திரஇராசியாகில் அந்த இராசியை மூன்று கூறாக்கி முற்கூறில் ஒன்பதாம் இராசி அதிபதிக் கோளும், நடுக்கூறில் இலக்கினாதிபதியும், கடைக்கூறில் ஐந்தாம் இராசியாதிபதிக் கோளும் பொசிப்பன். உபய இராசியாகில் முதற் கூறு ஐந்தாம் இராசியாதிபதியும், நடுக்கூறு ஒன்பதாம் இராசியதிபனும், கடைக்கூறு இலக்கினாதிபனும் பொசிப்பன்" என்று கூறும். (சட்வர்க்கப்படலம்-2)

"பரவு திரேக்காணமது"-(241) என்னுஞ் சாதகாலங்காரப் பாடலும் வீமேசுரன் உள்ளமுடையானைப் போலவே கூறுகின்றது.

### ஓரைக்கு அதிபரும், பிறர் வேண்டு மாற்றால் திரேக்காணாதிபரும்

13. இசைபிர தமவோ ரைக்கவ்
விராசியா திபனே யாகும்
அசைவிலா விரண்டா மோரைக்
கிலாபேச னதிப னாகும்
முசிவறு திரேக்கா ணேசன்
முன்னவன் வியேச னந்த
மிசையுறு மிலாப மாள்வோன்
அதிபனா மெனவி ளம்பே.

(எ-து) முந்தின ஓரைக்கு அந்த இராசியதிபனே அதிபன். இரண்டா மோரைக்கு இலாபாதிபனே அதிபன் என்றறியவும்.

திரேக்காணம், முதல் திரேக்காணத்திற்கு அந்த இராசிக்குடையவன், இந்த இரண்டாவதற்குப் பன்னிரண்டா மிராசியுடையவன். மூன்றாவதற்குப் பதினொன்றா மிராசியுடைவன் அதிபனாம் (எ-று)

குறிப்பு:- ஓரை என்றது இராசியின் பாதியாகும். ஆண் இராசிக்கு முற்பாதி சூரிய ஓரையும், பிற்பாதி சந்திர ஓரையுமாம். பெண் இராசிக்கு முற்பாதி சந்திர ஓசையும், பிற்பாதி சூரிய ஓரையுமாம்.

ஆண், பென் என்னும் எல்லா இராசிகட்கும் முதல் ஓரைக்கதிபன் அந்தந்த இராசியதாபனாவான். இரண்டாவது ஓரைக்குப் பதினோன்றாம் இராசியதிபனே அதிபதினாவான என்றறிக.

திரேக்காணத்திற் சரம், திரம், உபயம் என்னும் இராசிகட்கும் முதற் கூறுக்கு இலக்கினாதிபனும், இரண்டாங் கூறுக்குப் பன்னிரண்டாதிபனும், மூன்றாங் கூறுக்குப் பதினொன்றாமதிபனும், திரேக்காணாதிபர் ஆகின்றனர் என்பது யவனாசாரியருடைய கொள்கையாகும். இதனை சோதிடர்கள் வழங்குவதாகத் தெரியவில்லை.

## கோள்களுக்கு
## உச்ச இராசிகளும் நீச இராசிகளும்

14. மறியுடன் எருது மான்பெண்
        வருகுளிர் மீனம் கோலேழ்
    எறிகதிர் முதலா யுச்சம்
        பத்துமூன் றிருபத் தெட்டும்
    குறியதி னைந்து மைந்தும்
        இருபத்தேழ் இருபான் கூறில்
    செறியுமத் துச்ச பாகந்
        திகழதி நீச மேழே

(எ-து) மேடம், இடபம், மகரம், கன்னி, கர்க கடகம், மீனம், துலாம் என்னும் இந்த ஏழு இராசியும் ஆதித்தன் முதலாக அடைவிலே உச்ச இராசிகள் என்றறிவது. அன்றியும், பத்தும், மூன்றும், இருபத்தெட்டும், பதினைந்தும், ஐந்தும், இருபத்தேழும், இருபதும் ஆதித்தன் முதல், ஏழு கேள்விகளுக்கும் அடைவிலே அத்துச்ச (அதியுச்ச) பாவமென்றறிவது.

வரலாறு: ஆதித்தனுக்கு மேடம் பத்தாம் பாகை, சந்திரனுக்கு இடபம் மூன்றாம் பாகை, செவ்வாய்க்கு மகரம் இருபத்தெட்டாம் பாகை, புதனுக்குக் கன்னி பதினைந்தாம் பாகை, வியாழத்திற்குக் கர்க்கடகம் ஐந்தாம் பாகை, வெள்ளிக்கு மீனம் இருபத்தேழாம் பாகை, வெள்ளிக்கு மீனம் இருபத்தேழாம் பாகை, சனிக்குத் துலாம் இருபதாம் பாகை இவை அத்துச்ச பாகை என்றறிவது.

"அதிநீசம் ஏழே" என்று சிறப்பித்த வதனால், ஆதித்தனுக்குத் துலாம் பத்தாம் பாகமும், சந்திரனுக்கு விருச்சிகம் மூன்றாம் பாகமும், செவ்வாய்க்குக் கர்க்கடகம் இருபத்தெட்டாம் பாகமும், புதனுக்கு மீனம் பதினைந்தாம் பாகமும், வியாழத்திற்கு மகரம் அஞ்சாம் பாகமும், வெள்ளிக்குக் கன்னி இருபத்தேழாம் பாகமும், சனிக்கு மேடம் இருபதாம் பாகமும் ஆகிய இவை அதிநீசம் என்றறிவது.

அதிநீசம் எனினும் பரம நீசம் எனினும் ஒக்கும் (எ-று).

## வர்க்கோத்தம நவாங்கிசமும் மூலத் திரிகோண இராசிகளும்

15. ஆய்சரந் திரோப யங்கட்
காதிமத் தியமே யந்தம்
ஏய்தரு மிவற்றை வர்க்கோத்
தமநவாங் கிசம தென்பர்

பாய்யரி யேறு மேடம்
பாவைவிற் கோல்சால் ஏழும்
சாய்கதிர் முதலாய் மூலத்
திரிகோண மென்று சாற்றே.

(எ-து) சர விராசி, திரவிராசி, உபய விராசிகளுக்கு ஆதி, மத்திய, அந்தியம் என்னும் இவை வர்க்கோத்தம நவாங்கிசம் என்றறிவது. அஃதாவது சரவிராசிகட்கு ஆதி நவாங்கிசமும், திர விராசிகட்கு மத்திய நவாங்கிசமும், உபய இராசிகட்கு அந்திய நவாங்கிசமும் இவை வர்க்கோத்தம நவாங்கிசம் என்றறிவது.

சிங்கம், இடபம், மேடம், கன்னி, தனுசு, துலாம், கும்பம் என்னும் இவை அடைவே ஆதித்தன் முதலான ஏழு கோள்களுக்கும் மூலத்திரிகோண பவனம் (எ-று)

குறிப்பு:- வர்க்கோத்தமாம்சம் என்பது தன்னுடைய ஸ்புடம் நிற்கின்ற இராசியில் வருகின்ற நவாம்சமாகும். ஒன்பது பாகத்துள் சரவிராசிக்கு முதலாவது பாகமும், திரவிராசிக்கு ஐந்தாவது பாகமும், உபய விராசிக்கு ஒன்பதாவது பாகமும் வர்க்கோத்தமம் ஆகும். (சாராவளி 3-13)

ஆதித்தனுக்குச் சிங்கமும், சந்திரனுக்கு இடபமும், செவ்வாய்க்கு மேடமும், புதனுக்குக் கன்னியும், குருவிற்குத் தனுசும், சுக்கிரனுக்குத் துலாமும், சனிக்குக் கும்பமும் மூல க்ஷேத்திரங்கள் ஆகும். மூலத்திரிகோணம் மூல க்ஷேத்திரம் ஒரு பொருட்சொற்கள். மூலத்திரிகோண பாகையை

"அருக்கனுக்குச் சிங்கத்தி லிருபதே பாகை
அம்புலிக்கோ விடபத்திற் பாகைமூன் றின்மேல்
பெருக்குமிரு பத்தேழு சேய்க்குமே டத்திற்
பேசுமொரு பனிரண்டாம் புதற்குக்கன் னிதனில்

செருக்குபதி னைந்தின்மேற் பத்துகுரு விற்கே
சிலையிலொரு பதுவெள்ளிக்கேதுலாந் தன்னில்
நெருக்குமொரு பதினைந்து சனிதனக்குக் குடத்தில்
நிகரிலிரு பதுபாகை மூலத்ரி கோணம்"

என்னும் (120) சாதக சிந்தாமணிப் பாடலால் அறியலாம். சோதிட கிரக சிந்தாமணி இராகுவிற்குக் கும்பமும், கேதுவிற்குச் சிங்கமும், குளிகனுக்கு மீனமும் மூலத்திரிகோண இராசிகளாம் என்று கூறுகிறது. சாதகாலங்காரம் சிறிது வேறுபட்டு "நலமறு சனிக்கே மகரம தாகும்" (42) என்று கூறுகிறது. இவ்வாறே பரதீபிகை சூரியன் முதலான கிரகங்கட்கு 20, 27, 12, 5, 10, 5, 4 ஆகிய இவை முறையே மூலத்ரிகோணபாகை என்று கூறும். (அத்-1-சு-7)

## இலக்கினம் முதலான பன்னிரண்டு பாவங்களின் பெயர்களும் உபசயத் தானமும்

16. சாற்றிய தனுக்கு டும்பம்
சகோதரம் பந்து புத்திரன்
மாற்றுறும் அரியே மத்தி
மரணமே சுபங்கள் தானும்
தேற்றுமாஸ் பதமே ஆயம்
இரிப்பஞ்செப் பிடுமோ ராதி
ஏற்றுமூன் றாறு பன்னொன்
றீரைந்தா முபச யங்கள்

(எ-து) தனு, குடும்பம், சகோதரம், பந்து, புத்திரன்,அரி, மத்தி (மதம்) மரணம், சுபம், ஆஸ்பதம், ஆயம்,இரிப்பம் என்னும் இவை இலக்கினம் முதல் பன்னிரண்டு இராசிக்கும் பெயர்.

வரலாறு: தனு இலக்கினம், குடும்பம் இரண்டாமிடம், சகோதரம் மூன்றாமிடம், பந்து நான்காமிடம், புத்திரன் ஐந்தாமிடம், அரி ஆறாமிடம், மத்தி ஏழாமிடம், மரணம் அட்டமம், சுபம்

ஒன்பதாமிடம், ஆஸ்பதம் பத்தாமிடம், ஆயம் பதினொன்றாமிடம். இரிப்பம் பன்னிரண்டாமிடம் என்றறிவது.

இலக்கினத்திற்கு மூன்றாமிடம், ஆறாமிடம், பதினொன்றாமிடம், பத்தாமிடம் இவைகள் உபயத்தானம் என்று பெயராம் (எ-று)

**இப் பாட்டும் இலக்கினம் முதலானவற்றின் பெயரைக் கூறுகின்றது**

17. கல்லியம் சுயமு விக்ரம்
அஞ்சுகம் பிரிதி பங்கள்
கொல்லரிய ரிபுசித் தோத்தம்
இரந்திரம் குருவே மானம்
நில்பவம் வியஞ்ச துர்த்தம்
நிதனமே சதுரஸ் ரங்கள்
சொல்லுஞ்சத் தமந்தி யூனம்
தொழிலுமாக் கினையாஞ் செப்பே.

(எ-து) கல்லியம் இலக்கினம், சுயமு இரண்டாமிடம், விக்கிரமம் மூன்றாமிடம், சுகம் நான்காமிடம், பிரிதிபம் ஐந்தாமிடம், இரிபு ஆறாமிடம், சித்தோத்தம் ஏழாமிடம், இரந்திரம் எட்டாமிடம், குரு ஒன்பதாமிடம், மானம் பத்தாமிடம், பவம் பதினொன்றாமிடம், வியம் பன்னிரெண்டாமிட மென்று இலக்கினம் முதல் பன்னிரண்டுக்கும் பெயர்.

சதுர்த்தம் நான்காமிடம், நிதனம் எட்டாமிடமாகையால் நான்காமிடத்திற்கும், எட்டாமிடத்திற்கும் சாதுரஸ்ரம் என்று பெயர். இலக்கினத்திற்குச் சத்தமக் கிரகத்திற்குத் (வீட்டிற்கு) தியூனம் என்று பெயர். தொழில், ஆக்கினை பத்தாமிட மென்று பெயர். (எ-று)

**குறிப்பு**:- கல்பம் என்னுஞ் சொல் கல்லியம் என்று திரிந்தது. ஸ்வம், ஸ்வம்மு என்னுஞ் சொல் சுயமு என்று திரிந்தது.

## கேந்திரங்களும் கேந்திரங்களில் வலியுள்ளவையும்

18. சத்தம விலக்கி னங்கள்
சதுர்த்தகன் மங்கள் நான்கிற்
கொத்ததோர் கண்டங் கேந்திரம்
உயர்சதுட் டயமாம், கீடம்
பைத்ததோர் நரர்ச லங்கள்
பசுபமும் வலியா மென்பர்
எய்த்திடு மிவற்றுக் கேழில்
வலியிலை யென்பர் மேலோர்.

(எ-து) சத்தமம், இலக்கினம், சதுர்த்தம், கன்மம் இந்த இராசிகளுக்குக் கண்ட மென்றும், கேந்திர மென்றும், சதுட்டய மென்றும் பெயராம். அடைவே, சத்தமத்திற் கீடவிராசி வலிது. இலக்கினத்தில் நர இராசி வலிது. நான்காமிடத்தில் அம்புச (சலத்திற்றோன்றிய) இராசிகளும், கர்மத்திற் சதுட்பாத விராசிகளும் (நாற்காலிராசிகளும்) பெலங்கள்.

அஃதாவது, கீடம் விருச்சிகம், அஃது ஏழாமிடத்திற் பெலம். நரவிராசிகள் மிதுனந் துலாங் கன்னி கும்பம் தனுவின் மேலே பாதியும், இவை இலக்கினத்தில் வலிகள். செல இராசிகள் கர்க்கடகமும், மீனமும், மகரத்திற் கீழிடமும், இவை நாலாமிடத்து வலிகள். சதுஷ்பாதங்கள் மேடமும், இடபமும், சிங்கமும், தனுவினுடைய கீழே பாதியும், இவை பத்தாமிடத்தில் வலிகள்.

இச்சொல்லிய இராசிகள் அந்தத் தானத்துக்கு ஏழாமிடத்தில் ஏதும் வலியில்லை. இடையிலுள்ள இராசிகளுக்கு மத்திம பெலம் உண்டாம். (எ-று) 18

**குறிப்பு**:- "இவற்றில் உதய இராசியை உதய கண்டமென்றும், நான்காமிராசியை நீர்க்கீழ்க் கண்டமென்றும், ஏழாமிராசியைப் பாட்டுக் கண்டமென்றும், பத்தாமிராசியை உச்சிக்கண்டமென்றும் சொல்லுவர். உதய இராசி, கோணம், கண்டம் என்னும் இரண்டிற்கும் பொதுமையாக விருக்கினும் கண்டங்களுக்கே சிறப்புடைத்தாம்" என்னும் சினேந்திரமாலை 34-ஆம் பாட்டின் உரையினையும், "இருகாலிராசிகள் நான்கும் உ தயத்தில் வலிது, சிறகுக்காலிராசிகள் இரண்டும் நீர்க்கீழ் வலிது, பலகாலிராசிகள் இரண்டும் பாட்டில் வலிது, நாற்காலி ராசிகள் நான்கும் உச்சியில் வலிது என்று இங்ஙனமாக இராசிகளின் கண்டவலிது சொல்லப்படும்" என்னும் சினேந்திரமாலை 40-ஆம் பாட்டின் உரையினையும் ஒப்பு நோக்கி அறிக.

## பன்னிரண்டு பாவங்களும் கேந்திரம் பணபரம் அபோக்கிலீபம் என மூன்றாக அடங்கும் என்றாலும், நான்காம் பாவம் முதலானவற்றின் பெயர்களும்.

19. கேந்திரம் பரமே யாபோக்
கிலீபமே யுதய மாதி
ஏய்ந்தவம் புசஞ்சு கங்கள்
இபுகம்வேக் குமம்நான் கின்பேர்
சேர்ந்தவத் தமஞ்சா மித்திரம்
சுதபத்திரி கோண மைந்தாம்
சாய்ந்தமே சூர ணங்கள்
தசமமே கன்மம் பத்தே.

(எ-து) கேந்திரமாவது உதயம், நான்காமிடம், ஏழாமிடம், பத்தாமிடம் என்னும் நான்காகும். இக்கேந்திதர தொட்டுக் கேந்திரம்,

